# ஸ்ரீ ஸாயிநாத பூஜை



## 9 வாரம்

## வியாழக்கிழமை விரத பூஜையின் மஹத்துவம்



உ

ஓம் ஸ்ரீ ஸாயி ராம்



# ஸ்ரீ ஸாயிநாத பூஜை

## 9 வியாழக்கிழமை

## விரத பூஜையின் மஹத்துவம்

(9 வியாழக்கிழமை பூஜையை பக்தி சிரத்தையுடன், பாராயணம் செய்பவர்களுக்கு ஸ்ரீ ஸாயிநாதரின் அனுக்கிரஹமும் ஆசீர்வாதமும் பரிபூரணமாகக் கிடைக்கும்)


धर्मो रक्षति रक्षितः GIRI SINCE 1951 FOR INDIAN CULTURE & TRADITION

கிரி

கிரி டிரேடிங் ஏஜென்ஸி பிரைவேட் லிமிடெட்

**SRI SAINATHA PUJAI**

**(Tamil)**



**ISBN : 978-81-7950-503-8**

**3rd Edition : February 2011 | 19th Reprint : September 2019**

**Pages 48 | Crown 1/8 | N.S. Maplitho | 10000 Copies**

**Published by : GIRI TRADING AGENCY PRIVATE LIMITED**



***Regd. Office*** : Modi Niwas, Opp.Post Office, Matunga, Mumbai - 19. ✆ (022) 2412 1344

***Admn. Office*** : No.372/1, Mangadu Pattur Koot Road, Mangadu, Chennai - 600 122.

✆ +91 44 66 93 93 93 (Multiple Lines), +91 44 2679 3190, 3100

www.giri.in ✉ sales@giri.in

**SHOWROOMS : MUMBAI - CHENNAI - KANCHIPURAM - COIMBATORE - MADURAI - TRICHY PUDUCHERRY - KUMBAKONAM - SECUNDERABAD - BANGALORE - NEW DELHI**

# முன்னுரை

ஸாயியின் பிறப்பு எங்கு எப்படி நிகழ்ந்தது என்று யாராலும் கூற இயலாது. 16 வயது பாலகனாக சிர்டியில் வேப்ப மரத்தடியின் அடியில் தரிசனம் அளித்த ஸாயி அன்று முதல் சிர்டி கிராமத்தையே தனது இருப்பிடமாக்கி கொண்டு, தன்னை நாடி வரும் பக்தர்களுக்கு அவரின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதோடு அவர்களின் மனமறிந்து அவர்களின் இச்சையை பூர்த்தி செய்கிறார். பாபா நீயே தாய், நீயே தந்தை, நீயே குரு, நீயே நண்பன், நீயே உறவினர், அனைத்தும் நீயே என்று அவர்மீது நம்பிக்கை வைத்து ஸதா ஸாயியை ஸ்மரணம் செய்பவர்களை இலக்கு அடையும் வரை துணை நிற்பவர் நம் பாபா. நாம் எங்கு சென்றாலும் எத்தகைய இடத்திலும் பாபா என்று அழைத்தோமேயாயின் ஒரு தர்யைவிட வேகமாக ஓடி வந்து நம் தேவையை பரிபூரணமாக்கிடுவார் பாபா. தன்னை நம்பினவர்களை மட்டுமல்லாது நம்பாதவர்களையும் தன் வசம் ஈர்க்கக் கூடியவர் பாபா.

ஒருசமயம் பாபா மசூதியில் விளக்கேற்ற எண்ணெய் கேட்டபோது சில தீயவர்களின் உபதேசத்தால் ஒருவரும் எண்ணெய் கொடுக்கவில்லை. அதற்காக யாரையும் ஒன்றும் கூறாமல் அவர்களே வியக்கும் வண்ணம் நீரால் விளக்கேற்றியவர் பாபா. இந்த உலகின் பசியை தீர்க்கும் பாபா, பிக்ஷை எடுப்பதே அவர்களின் பாபங்களை தான் ஏற்று அவர்களை புனிதர்களாக்குவதற்குதான். மொத்தத்தில் பாபாவின் இந்த புத்தகம் நம்மிடம் இருந்தால் நம் இன்ப

துன்பங்கள் இரண்டிலும் எப்பொழுதும் பாபா நம்முடன் இருப்பார் இது உறுதி.

"பாபா நான் உனக்கு 9 வாரம் விரதமிருக்கிறேன் என் திருமணத்தை விரைவாக நடத்தி வை என்று வேண்டி 9 வியாழக்கிழமை பாபாவிற்கு விரதமிருந்து நல்ல கணவனை கைபிடித்தாள் ஷீலா. அதே போல் ராமு என்றவன் பள்ளியில் மிகக் குறைவான மதிப்பெண் பெற்று வெட்கி தலைகுனிந்தான். பிறகு தன் சித்தி மூலம் இந்த விரதத்தை அறிந்து இந்த 9 வாரம் விரதமிருந்து தான் நினைத்ததைவிட அனைத்திலும் அதிக மதிப்பெண் பெற்று 10ஆம் வகுப்பு தேர்வில் அந்த பள்ளியிலேயே 3வது மாணவனாக வந்தான்". இப்படி பாபாவின் இந்த விரதத்தால் பலனடைந்தோர் பலர். ஆகவே பாபாவின் மீது நம்பிக்கை வைத்தவர்கள் அனைத்திலும் வெற்றியே காண்பர். இது உறுதி.

ஸமர்த்த ஸத்குரு ஸாயிநாத் மஹராஜ்கீ ஜெய்

– ஸாயிராம்

# பதிப்புரை

'குரு இல்லையேல் ஜெகம் இல்லை' என்பதற்கேற்ப, சரியான குருவின் வழிகாட்டுதல் இல்லாமல் நம்முடைய இலக்கை நம்மால் சுலபமாக அடைய முடியாது. நமது ஸத்குரு ஸித்த புருஷரான ஸ்ரீ சிர்டி ஸாயி பாபாவும் தன்னை நம்பி வந்தவர்களை அவர்களது வாழ்க்கைப் பயணம் முடியும் வரை உடன் இருந்து அவர்கள் கரம் பிடித்து கரை சேர்ப்பார். இதில் எள்ளளவும் ஐயமில்லை.

பக்தர்களுக்கு இரங்கும் கருணை உள்ளம் படைத்த பாபாவோ பாரத நாட்டின் பாரம்பரிய தத்துவமான மத நல்லிணக்கத்திற்கு எடுத்துக்காட்டாக வாழ்ந்தவர். ஏழை-பணக்காரர், உயர்ந்தவர்-தாழ்ந்தவர், ஹிந்து-முஸ்லிம் என்ற வேறுபாடு இவருக்கு இல்லை. அனைவரும் இவருக்கு சமமே என்பது, ஜாதி, மத வேறுபாடின்றி அவரது ஸன்னிதியில் கூடும் பக்தர்களை கண்டாலே நமக்கு புலனாகும்.

பாபா பக்தரிடம் எதிர்பார்ப்பதெல்லாம் பொருளோ பணமோ அல்ல, உண்மையான பக்தி மற்றும் நம்பிக்கை மட்டுமே. ஸாயியை தம் குருவாக ஏற்று துதிக்கும் பக்தர்களுக்காக பூஜை, பஜனை, அஷ்டோத்தர சத நாமாவளி, ஸாயி சாலீஸா, ஸாயியின் உறுதிமொழிகள், பாபாவின் அருளும், பக்தர்களின் அனுபவங்களும் மற்றும் ஸாயி ஆரத்தி ஆகியவைகளும் தொகுத்து கொடுக்கப்பட்டுள்ளன.

வெறும் வியாபார நோக்கத்தோடு மட்டுமல்லாமல் சேவை மனப்பான்மையுடன் பிரசுரிக்கப்பட்ட 'ஸ்ரீ ஸாயிநாத பூஜை' 9 வியாழக்கிழமை விரதபூஜையின் மஹத்துவம் எனும் இப் புத்தகத்தை ஸாயிநாதரின் பக்தர்களுக்காக வெளியிடுவதில் 'கிரி' நிறுவனம் மிகவும் பெருமை கொள்கிறது. ஆகவே அனைத்து ஸாயி பக்தர்களும் இப் புத்தகத்தில் அளித்துள்ள எளியமுறை பூஜையை மேற்கொண்டு ஸாயியின் அருள் மழையில் நனையும்படி உலகிற்கே குருவான ஸாயிநாதரை வேண்டுகிறோம்.



– பதிப்பகத்தார்

# பொருளடக்கம்



இந்த புத்தகத்தில் ச' எழுத்து வரும் இடங்களிலெல்லாம் அதை (श,Sha) என்ற உச்சரிப்பில் மட்டுமே உச்சரிக்க வேண்டும். ஏனெனில் ஸம்ஸ்க்ருத श (Sha) எழுத்திற்கு நிகரான எழுத்து தமிழில் இல்லை.

உதாரணம்: शंकरा-Shankara- ச'ங்கரா, शिव - Shiva - சி'வ

மற்றும்'ऽ' எழுத்து வரும் இடங்களிலெல்லாம் அதை'அ' என்று உச்சரிக்கவும்.



ஸாயிராம்

## சி'ர்டீ ஸாயி காயத்ரீ மந்த்ரம்

ஓம் சி'ர்டீ வாஸாய வித்மஹே
ஸச்சிதாநந்தாய தீமஹி
தன்னோ ஸாயி ப்ரசோதயாத்

## தாஸகணு விரசித ப்ரார்த்தனாஷ்டகம்

சா'ந்தா சித்தா மஹா ப்ரஜ்ஞா । ஸாயிநாதா தயாகனா ।
தயா ஸிந்தோ ஸத்ய ஸ்வரூபா । மாயா தம் விநாச'னா ।
ஜாதா கோதா தீதா சித்தா । அசிந்த்யா கருணாலயா ।
பாஹிமாம் பாஹிமாம் நாதா । சி'ரடி க்ராம நிவாஸியா ।
ஸ்ரீ ஜ்ஞானார்த்த ஜ்ஞானதாத்யா । ஸர்வமங்கள காரகா ।
பக்த சித்த மராளாஹே । ச'ரணாகத ரக்ஷகா ।
ஸ்ருஷ்டி கர்த்தா விரிஞ்சீதூ । பாதாதூ இந்திராபதி ।
ஜகத்ரய லயாநேதா । ருத்ரதோ தூம்ச நிச்'சிந்தீ ।
துஜ வீணே ரிதா கோட்டே டாவ நாதா மஹீவரீ ।
ஸர்வஜ்ஞுதூ ஸாயிநாதா ஸர்வாஞ்ச்யா ஹ்ருதயாந்தரீ ।
க்ஷமா ஸர்வாபரா தாஞ்சி கராவீ ஹேஞ்சி மாகனே ।
அபக்தி ஸம்ச'யாச்யா த்யா । லாடா சீ'க்ர நிவாரணே ।
தூதேனூ வத்ஸ மீதான்ஹே । தூ இந்து சந்த்ர காந்தமீ ।
ஸ்வர்ண தீரூப । த்வத்பாதா ஆதரே தாஸஹா நமீ ।
டேவ ஆதா ஸ்ரீ மாஞ்யா । க்ருபே ச்யா கரபஞ்ஜர ।
சோ'க சிந்தா நிவாராவீ । கணுஹா தவ கிங்கர ।






## ஸ்ரீ தத்த ஸ்தவம்

தத்தாத்ரேயம் மஹாத்மானம் வரதம் பக்தவத்ஸலம் ।
ப்ரபந்நார்த்தி ஹரம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
தீனபந்தும் க்ருபா ஸிந்தும் ஸர்வகாரண காரணம் ।
ஸர்வ ரக்ஷாகரம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ச'ரணாகத தீனார்த்த பரித்ராண பராயணம் ।
நாராயணம் விபும் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ஸர்வானர்த்த ஹரம் தேவம் ஸர்வ மங்கள மங்களம் ।
ஸர்வ க்லேச' ஹரம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ப்ரஹ்மண்யம் தர்ம தத்வஜ்ஞும் பக்த கீர்த்தி விவர்த்தனம் ।
பக்தாபீஷ்ட ப்ரதம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
சோ'ஷணம் பாப பங்கஸ்ய தீபணம் ஞான தேஜஸா ।
தாப ப்ரச'மனம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ஸர்வரோக ப்ரச'மனம் ஸர்வபீடா நிவாரணம் ।
விபதுத்தரணம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ஜன்ம ஸம்ஸார பந்தக்னம் ஸ்வரூபா நந்த தாயகம் ।
நி:ச்'ரேயஸ பதம் வந்தே ஸ்மர்த்ரு காமீஸனோऽவது ॥
ஜயலாப யச'ஸ் காம தாதுர்தத்தஸ்ய ய: ஸ்தவம் ।
போக மோக்ஷ ப்ரதஸ்யேமம் ப்ரபடேத் ஸக்ருத் பவேத் ॥





# ஸாயி பாபாவை பூஜை செய்யும் போது நாம் கடைபிடிக்க வேண்டிய விதிமுறைகள்

1. அற்புத பலன்தரும் இந்த 9 வியாழக்கிழமை விரதத்தை கடைப்பிடித்தால் எண்ணிய எண்ணங்கள் அனைத்தும் நிறைவேறும்.
2. இந்த விரதத்தை ஜாதி மதபேதமின்றி ஆண், பெண் அனைவரும் செய்யலாம்.
3. ஏதாவது ஒரு கோரிக்கையை முன்னிட்டு பாபாவை நோக்கி தூயமனதுடன் 9 வாரம் விரதமிருந்தால் நினைத்தது கைகூடும்.
4. ஒரு வியாழக்கிழமையன்று துவங்கி தொடர்ந்து 9 வியாழக்கிழமை இந்த விரதத்தை மேற்கொள்ள வேண்டும்.
5. காலையிலோ மாலையிலோ உங்களுக்கு உகந்த நேரத்தில் இப் பூஜையை மேற்கொள்ளலாம் (நேரம் இல்லாதவர்கள் இரவு கூட செய்யலாம்)
6. விரதமிருப்பவர்கள் முடிந்தால் பால், பழம் போன்றவற்றை உட்கொண்டு உபவாசம் இருப்பது சிறந்தது. அவ்வாறு உபவாசம் இருக்க முடியாதவர்கள் பாபாவின் பூஜை முடிந்த பிறகு உணவருந்தலாம். இந்த விரத நாட்களில் தயிர், மோர் இவற்றை தவிர்ப்பது நலம்.
7. விரதம் மேற்கொண்டுள்ள 9 வியாழக்கிழமைகளும் முடிந்தால் ஸாயிபாபா கோயிலுக்குச் சென்று தரிசனம் செய்து வரவும். அவ்வாறு முடியாதவர்கள் வீட்டிலேயே ஸாயிபாபாவை மனமுருக வேண்டிக் கொள்ளலாம்.
8. வெளியூர் செல்வதானாலும் இந்த விரதத்தை கடைபிடிக்கலாம். அதாவது இந்த புத்தகத்தை தன்னுடன் எடுத்து சென்று தாம் இருக்கும் இடத்திலேயே

செய்யலாம் முடிந்தால் அவ்வூரிலுள்ள கோயிலுக்குச் சென்று ஸாயியை தரிசனம் செய்யலாம்.

9. விரத காலங்களில் பெண்களுக்கு மாதவிலக்கு அல்லது இன்ன பிற காரணங்களால் விரதம் தடைபட்டால் மற்றொரு வியாழக்கிழமை விரதமிருந்து விரதத்தை நிறைவு செய்து கொள்ளலாம்.

10. இப் புத்தகத்தில் கொடுக்கப்பட்டுள்ள அனைத்து விஷயங்களையும் விரத சமயத்தில் கடைபிடிப்பது சிறந்தது. மற்றும் விரதம் முடிந்த பிறகும் இதில் கொடுக்கப்பட்டுள்ள மனஅமைதி பெற, தொலைந்தது கிட்ட, தேர்வில் வெற்றி பெற என்பது போன்ற பல தலைப்புகளிலிருக்கும் ஸாயி பக்தர்களுக்கு நிகழ்த்திய அற்புதங்களில் தினமும் அவர்களுக்கு தேவையானதை படித்து அவர்களின் விருப்பங்களை நிறைவேற்றி கொள்ளலாம்.

11. பூஜை தொடங்குவதற்குமுன் பாபாவின் படத்திற்கோ அல்லது பிம்பத்திற்கோ பூக்களை சமர்ப்பித்து ஊதுவத்தியை ஏற்றி வைக்கவும்.

12. பூஜையை தொடங்குவதற்கு முன் "ஸ்ரீ ஸச்சிதானந்த் ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ ஸாயி நாத் மஹராஜ் கீ ஜய்" என்று 3 முறை கூறி பிறகு அவரவர் குல தெய்வம், இஷ்ட தெய்வங்களை மனதில் ப்ரார்த்தித்துக் கொள்ளவும்.

13. பூஜை செய்யும் இடத்தில் ஒரு மணையை போட்டு அதன் மீது ஒரு வஸ்திரத்தை விரித்து அதன் மீது ஸாயி பாபாவின் பிம்பத்தையோ அல்லது படத்தையோ வைத்து சந்தன குங்குமமிட்டு இரு பக்கமும் தீபம் ஏற்றி வைக்கவும். பூஜை முடிந்ததும் நம் சக்திக்கேற்ப பழமோ, கற்கண்டோ, தண்ணீரோ, பாபாவிற்கு நிவேதனம் செய்யவும்.




"எனக்கு ஸமர்ப்பிக்கப்படும் இலை, பூ, பழம் எதுவாகிலும் அதை பரிசுத்தமான மனதோடும், பக்தியுடனும் ஸமர்ப்பிப்பார்களேயானால் அவற்றை நான் முழுமனதுடன் ஏற்றுக் கொள்கிறேன்" என்கிறார் ஸாயிநாதர். இதையேதான் பகவத்கீதை 9வது அத்தியாயத்தில் ராஜவித்யா ராஜ குஹ்யா யோகத்தில் 26வது ஸ்லோகத்தில் "பத்ரம், புஷ்பம், ஃபலம், தோயம், யோ மே, பக்த்யா ப்ரயச்சதி, ததஹம் பக்த்யுபஹ்ருதம் அச்'னாமி ப்ரயதாத்மன:" கிருஷ்ணபரமாத்மா, அர்ஜுனனுக்கு உபதேசித்தார்.

மேலுள்ள விஷயத்தை நினைவில் கொண்டு, பரிசுத்தமான மனதோடும், பக்தி விசுவாசத்துடனும் பூஜை பாராயணம் போன்ற நிகழ்ச்சியில் கலந்து கொண்டால், விசேஷமான பலனை பெறலாம் என்பது உறுதி.

## விரத நிறைவு விதிமுறைகள்

1. விரதம் நிறைவு செய்யும்போது 5 பேருக்காவது உணவளிக்க வேண்டும். முடியாதவர்கள் பழம், பிஸ்கெட் போன்று தங்களால் இயன்றதை ஏழைகளுக்கு கொடுக்கவும்.
2. 9, 18, 32 என்ற கணக்கில் தங்களால் இயன்ற அளவு இப் புத்தகத்தை பூஜையில் வைத்து பிறகு விநியோகம் செய்யலாம்.
3. இவ்வாறு செய்வதால் புத்தகத்தை கொடுப்பவர்களின் விருப்பம் நிறைவேறுவதோடு, பெறுபவர்களின் விருப்பமும் நிறைவேறும்.

மேற்கூறிய விதிமுறைகளின்படி விரதமும் விரத நிறைவும் செய்தால் நிச்சயமாக எண்ணியகாரியம் அனைத்தும் ஸாயியின் அருளால் கைகூடும்.



## பாபாவின் உபதேச மொழிகள்

1. உணவு இல்லாதவர்களுக்கு உணவும், உடை இல்லாதவர்களுக்கு உடையும், நிழலில்லாதவர்களுக்கு நிழலும் தருவது எனக்குப் பிடிக்கும்.
2. பொறுமையை விட சிறந்த சொத்து வேறு எதுவும் இல்லை.
3. அடுத்தவர் குறையை நீ சுட்டிக் காட்டினால் உன்னுடைய குறையை இறைவன் எண்ணிக் கொண்டிருப்பார்.
4. என்னை நெருங்க நீ என் பக்தனாக இருக்க வேண்டும் என்ற நியதி இல்லை.
5. புண்ணிய க்ஷேத்திரத்தில் கொடுக்கப்படும் தானமானது, கொடுத்தவருக்கு அதிக பலனை அளிக்கும்.
6. மாமரத்திலிருந்து மாம்பிஞ்சு தானாகவே பாதியில் உதிர்வது போல் என்னை நாடுபவர்கள் அவர்களாகவே என்னை விட்டால் தவிர, நான் அவர்களை பாதியில் விடமாட்டேன். இறுதி வரை அவர்களுடன் இருந்து அவர்களின் இலக்கை அவர்களை அடைய செய்வேன்.
7. யார் எதைக் கேட்டாலும் அவர்களுக்கு எது நன்மை அளிக்குமோ அதை அவர்களுக்கு கொடுப்பேன்.
8. நீ எந்தவொரு சிறந்த புத்தகத்தை படிப்பதாக இருந்தாலும் ஸத்குருவின் கிருபை இருந்தால் மட்டுமே அது சாத்தியமாகும்.







9. ஆதி அந்தமில்லாத கடவுளின் பாதம் புனிதமானது அதை பற்றினால் அதுவே உன்னை கரை சேர்க்கும்.

10. உன் கடமையை சரிவர செய்வதோடு, இறைவனின் நாமத்தை உச்சரிப்பது, இறைவனின் பெருமைகளைச் சொல்லும் புத்தகங்களைப் படிப்பது போன்ற நற்காரியங்களில் ஈடுபட வேண்டும்.

11. மனிதர்களுக்கு தான் என்ற கர்வம் இருக்கக்கூடாது. அனைவரையும் தானாக பாவிக்கும் பண்பு இருக்க வேண்டும்.

12. யாரைப் பற்றி அவதூறாக பேசினாலும் அது என் மனதை புண்படுத்தும். ஆகவே அதை தவிர்க்கவும்.

13. நான் விரும்புவதெல்லாம் உன்னுடைய அன்புமிக்க பக்தி மட்டுமே ஆகும்.

14. குருவிற்கு தனம், தான்யம், வஸ்திரம் அளிப்பது மட்டுமே திருப்தி அளிக்காது. அவரின் கட்டளையை பின்பற்றுவதே உண்மையான குருதட்சிணையாகும்.

15. மனிதனாக் பிறந்தவன் பாபங்களை செய்வதை தானாகவே நிறுத்தினால் மட்டுமே கடவுளின் கருணையை பெற முடியும்.

16. நான் ஸர்வாந்தர்யாமி. யார் யாரை உதாசீனப் படுத்தினாலும், கௌரவப்படுத்தினாலும் அது என்னையே சாரும்.

17. நீங்கள் எங்கு இருந்தாலும், எதைச் செய்தாலும் அதை நான் அறிவேன் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

 

18. வாழ்க்கையில் மனதை கட்டுப்படுத்துபவர்கள் மட்டுமே ஐம்புலன்களையும் கட்டுப்படுத்த முடியும்.

19. நீங்கள் விரும்பினதை விட, நான் என்ன கொடுக்கிறேனோ அதுவே உங்களுக்கு சிறந்தது.

20. மனித ஜென்மம் எடுத்தது பிறருக்கு உதவுவதற்கே தவிர எவரையும் உதாசீனபடுத்துவதற்கல்ல.

21. மாற வேண்டியது உலகம் அல்ல உன்னுடைய மனம்.

22. என் பக்கம் நீ ஒரு அடி எடுத்து வைத்தால், உன் பக்கம் நான் பத்து அடி எடுத்து வைப்பேன்.

----*----

பகவான் நமக்குத்தரும் சோதனைகள் அனைத்தும் நம்முள் தன்னம்பிக்கையை வளர்ப்பதற்கு மட்டுமே. அவ்வாறு சோதனைகளை அளித்துக் கொண்டே நம்மை காப்பாற்றுவார்.

நாம் அறிந்தும் அறியாமலும், பேச்சின் மூலமும், கேட்பதின் மூலமும் செய்துள்ள பாவங்கள், ஸாயிநாதரை ஸதா ஸ்மரிப்பதன் மூலம் முற்றிலும் அகலும்.

நமக்கு என்ன வேண்டுமென்பது நம்மை விட, பாபாவிற்கு நன்றாகத் தெரியும். நாம் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியும் அவர் அறிந்ததே.

யாரும் இல்லாத இடத்தில் கூட ஸாயி நம்மை கவனிப்பார் என்பதை அறிந்து கொண்டால் நாம் யாருக்கும் தீங்கு செய்யமாட்டோம்.





# விபூதி தாரணம்

ஸாயிநாதரை மனதில் தியானித்துக் கொண்டு இந்த ஸ்லோகத்தை மூன்று முறை கூறி விபூதியை இட்டு கொள்ளவும்.

மஹாக்ரஹ பீடாம் மஹோத்பாத பீடாம்
மஹாரோக பீடாம் மஹாதீவ்ர பீடாம்
ஹரத்யாசு'தே த்வாரகாமாயி பஸ்மம்
நமஸ்தே குரு ச்'ரேஷ்ட்ட ஸாயிச்'வராய

ஸ்ரீகரம் நித்யம் சு'பகரம் திவ்யம்
பரமம் பவித்ரம் மஹாபாபஹரம்
பாபா விபூதிம் தாரயாம்யஹம்

பரமம் பவித்ரம் பாபா விபூதிம்
பரமம் விசித்ரம் லீலா விபூதிம்
பரமார்த்த இஷ்டார்த்த மோக்ஷ ப்ரதாதம்
பாபா விபூதிம் இதமாச்'ரயாமி
ஸாயி விபூதிம் இதமாச்'ரயாமி
ஸ்ரீ ஸாயி ஊதிமிதமாச்'ரயாமி ॥






# ஸ்ரீ ஸாயி சாலீஸா

சீ'ரடி வாஸா ஸாயிப்ரபோ –
நீயே ஜகத்தின் பாதுகாவலர்
தத்த திகம்பர அவதாரம் –
உன்னில் சிருஷ்டி விவகாரம்
த்ரிமூர்த்திரூபா ஓ ஸாயீ –
கருணையோடு காப்பாய் ஓ ஸாயீ
தரிசனம் கொடுக்க வாருங்கள் –
முக்திக்கு மார்கம் காட்டுங்கள் (சீ'ரடி)
கந்தலாடையே(கப்னி) பொன்னாடையாய் –
ஜோல்னா பையே தோளின் அணிகலனாய்
வேப்ப மரத்தினடியில் தோன்றி –
பக்கிரி ரூபத்தில் வலம் வந்தாய்
கலியுகத்தில் நீ அவதரித்தாய் –
பொறுமை தியாகம் கற்றுக் கொடுத்தாய்
சீ'ரடி கிராமம் உன்வாசம் –
பக்தர்கள் மத்தியில் உன் ரூபம்
சாந்த் பாட்டீல் ஆழ்ந்தார் கவலையிலே –
குதிரையை இருமாதம் காணவில்லையே
ஸாயி நீ அவனுக்கு இரங்கினாய் –
தொலைந்த குதிரையை மீட்டுத் தந்தாய் (சீ'ரடி)
எண்ணெய்க்குப் பதிலாய் நீரூற்றியுமே –
ஒளி கொடுத்தாய் நீ ஜோதிக்குமே
அதனைக் கண்டவர் மெய் மறந்தனரே –
கேட்டவர் வியப்பு மாளவில்லையே







தாத்யாவின் உயிர் ஊசலாடியதும் –
தந்தாயே நீ உன் ஆயுளையும்
தாய் பாய்ஜா செய்த சேவையினால் –
தாத்யா உயிரை காத்தாயே! (சீ'ரடி)

பசு, பட்சிகளிடம் இரக்கம் கொண்டாய் –
அன்பாலேயே எமக்கு அரசனானாய்
எல்லோர்பாலும் உன் அருள் நோக்கு –
பக்தனுக்களித்தாய் அமுத வாக்கு
உன் வாயில் படியில் நின்றேனே –
உன்னையே என்றும் துதித்தேனே
அபயம் தந்து காப்பாற்று ஸாயீ–
கருணை காட்டு சீ'ரடி ஸாயீ (சீ'ரடி)

உன்னுடைய அருளால் துவாரகாமாயீ –
பாக்கியமடைந்ததே ஒ ஸாயீ
உன் துனியின் ஜ்வாலை பட்டதுமே –
பாவம் போனது சட்டெனவே
பிரளய மழையை சொல்லால் தடுத்து –
பக்தர்களைக் காப்பாற்றினாய்
கோதுமையை அரைத்தாய் அரவையிலே –
அரவையில் காலராவும் அரைந்தனதே (சீ'ரடி)

மூலே சாஸ்திரி என்ற அந்தண ஸ்வாமிக்கு –
உனது லீலைகளைக் காட்டினாயே
விஷப் பாம்பு சாமாவை தீண்டியதுமே –
விஷமிறக்கி அருளினாய் ஜீவனுமே

பக்த பீமாஜிக்கு க்ஷயரோகம் –
பொறுமை இழந்தான் பீமாஜி




உதி வைத்தியம் செய்து –
        வியாதியை மாயம் செய்தாயே
காகாஜி கண்டார் உன் திவ்ய ரூபம் –
        அவருக்கு அளித்தாய் நீ விட்டல ரூபம்
தாமுவிற்கு அளித்தாய் சந்தானம் –
        அவர் மனம் பெற்றதே சந்தோஷம் (சீ'ரடி)

கருணாமூர்த்தி கருணை யுடைனே –
        எங்கள் மீது இரக்கம் காட்டு
அனைத்தும் உனக்கே அர்ப்பணமே –
        எங்கள் பக்தி பெருகட்டுமே
மேகாவும் உன்னை அறியாமலே –
        முஸ்லீம் என பேதம் கொண்டானே
உன்னில் காட்டினாய் சிவனையுமே –
        மேகாவும் அடைந்தான் பரமபதமே (சீ'ரடி)

மருத்துவருக்கு அளித்தாய் ஸ்ரீ ராம ரூபம் –
        பல்வந்தருக்கு அளித்தாய் ஸ்ரீ தத்த ரூபம்
நிமோன்கருக்கு அளித்தாய் மாருதி ரூபம் –
        சிதம்பரத்திற்கு அளித்தாய் கணபதி ரூபம்
மார்த்தாண்டருக்கு அளித்தாய் கண்டோபா –
        கணூக்கு சத்யதேவனாக
நரஸிம்ம ஸ்வாமியாய் ஜோசிக்கு –
        தரிசனம் தந்தாய் ஸ்ரீ ஸாயீ (சீ'ரடி)

இரவும் பகலும் உன் தியானம் –
        நித்யம் உன் லீலாபடனம்
பக்தியோடு செய்வாய் தியானம் –
        கிடைக்கும் முக்தி மார்கம்

உன் பதினொன்று வாக்குகள் –
பாபா அது எங்களுக்கு வேதங்கள்
சரணம் என்று வந்த பக்தர்களை –
கருணை காட்டி நீ காப்பாற்றினாய் (சீ’ரடி)

எல்லாவற்றிலும் உன் ரூபம் –
உன் மகிமை அதிக சக்தி மயம்
ஓ ஸாயீ நாங்கள் அஞ்ஞானிகள் –
தாருமய்யா எங்களுக்கு ஞானத்தையே
சிருஷ்டிக்கு நீயே மூலம் –
ஸாயீ நாங்கள் உன் சேவகர்கள்
ஸாயி நாமம் ஜெபித்துமே –
நித்யம் ஸாயியை பிரார்த்திப்போம் (சீ’ரடி)

பக்தியை நன்கு அறிந்து –
ஸாயியை மனதில் நினைத்துக்கொண்டு
மனதோடு ஸாயி தியானம் –
அனுதினமும் செய்ய வேண்டும்
பாபா எரித்த உதி –
நிவாரணம் தரும் அனைத்து வியாதி
சமாதியிலிருந்து ஸ்ரீ ஸாயி –
பக்தர்களை காப்பாற்றுவார் ஸ்ரீ ஸாயீ (சீ’ரடி)

நம் கேள்விக்கு பதிலில் –
தருவார் ஸ்ரீ ஸாயி சரித்திரம்
கேளுங்கள் அல்லது படியுங்கள் –
ஸாயி சத்தியம் என்பதை உணருங்கள்



ஸத் சங்கம் செய்யுங்கள் –
ஸாயி ஸ்வப்பனத்தில் தோன்றுவாரே
பாரபட்சத்தை விடுங்கள்
ஸாயியே நமது ஸத்குரு (சீ'ரடி)

வந்தனமய்யா பரமேசா –
ஆபத்பாந்தவா ஸாயீசா'
எங்கள் பாவங்களை கரையேற்றி –
மனதில் உள்ள கோரிக்கையை நிறைவேற்று
கருணாமூர்த்தி ஒ ஸாயீ–
கருணையோடு எங்களை கரையேற்று
எங்கள் மனமே உன் ஆலயம் –
எங்கள் சொற்களே உனக்கு நைவேத்தியம் (சீ'ரடி)

**ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ ஸாயிநாத் மஹராஜ் கீ ஜய்!**

**ஓம் சா'ந்தி: சா'ந்தி: சா'ந்தி:**







# ஸத்குரு ஸ்ரீ ஸாயிநாதா

ஸாயிபாபா ஸர்வாந்தர்யாமி, (எங்கும் வியாபித்திருப்பவர்), முற்றும் அறிந்த ப்ரஹ்ம ஞானி, பஞ்ச பிட்சகர் (ஒருநாளில் ஐந்து வீடுகளில் மட்டுமே பிட்சை எடுப்பவர்) நிரதாக்னி ஹோத்ரன் (சி'ர்டியில் அவரருகே எப்பொழுதும் "துனி" எரிந்து கொண்டே இருக்கும் காரணத்தால் அவரை இப்படியும் அழைப்பர்), அனைத்து சாஸ்திரங்களையும் கற்றறிந்தவர், தியான ஸ்வரூபி, அவரே ப்ரஹ்மா, விஷ்ணு, பரமேச்வரன். அப்படிப்பட்ட ஸ்ரீ ஸாயிநாதரை ஸாஷ்டாங்க நமஸ்காரம் செய்து நாம் வழிபடுவோம். ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ ஸாயிநாத் மஹராஜ்கீ ஜய்!

தேவர்களும் பிறப்பெடுக்க விரும்பும் மானிட பிறப்பில் நாம் சாதிக்க வேண்டிய பணிகள் பல உள்ளன. இது தெரியாமல் பொறாமை, கோபம், துவேஷம், பிறரை உதாசீனப்படுத்துதல் போன்ற செயல்களில் நாம் உழன்று கொண்டிருக்கிறோம்.

"புனரபி ஜனனம் புனரபி மரணம்" என்பது போல், இந்த லோகத்தில் பிறப்பு, இறப்புக்கான சுழற்சி மீண்டும் மீண்டும் நடந்து கொண்டுதானிருக்கிறது. இறப்பது மறுபடியும் பிறப்பதற்கா? அதைத் தாண்டி நம்மால் எதையும் ஸாதிக்க இயலாதா? நாம் எதற்காக இந்த மனித ஜென்மம் எடுத்திருக்கிறோம்? ஒரு தடவை நிதானமாக யோசியுங்கள். என்று கேட்கிறார் ஸாயிபாபா.




க்ருதே ஜனார்தனோ, த்ரேதாயாம் ரகு நந்தன:
த்வாபரே ராம க்ருஷ்ணௌ ச
கலௌ ஸ்ரீ ஸாயிநாத:

க்ருதயுகத்தில் ஜனார்த்தனராகவும், த்ரேதாயுகத்தில் ராமராகவும், த்வாபர யுகத்தில் கிருஷ்ணராகவும், அவதரித்த அந்த ஸ்ரீமந்நாராயணர் கலியுகத்தில் ஸாயிபாபாவாக ஜனித்தார். க்ருதயுகத்தில் ஹோமங்கள், யஜ்ஞங்கள் மூலமும், த்ரேதாயுகத்தில் யாகத்தின் மூலமும், த்வாபர யுகத்தில் பூஜை முறையிலும் தெய்வ வழிபாடுகள் நடைபெற்றது. தற்போது கலியுகத்தில் நாமஸ்மரணம் கொண்டு பூஜித்தாலே போதும் நாம் அனைத்தையும் பெறுவோம் என்கிறார் ஸாயி.

நாமஸ்மரணையிலும் 'குண நாமஸ்மரணம் விசேஷம்'. அதாவது யாருடைய நாமத்தை ஸ்மரணை செய்கிறோமோ அவர்களின் குணத்தையும் சேர்த்து துதித்தோமேயானால் அது அதிக பலன்களைத் தரும். அது மட்டுமல்லாமல் ஸத்ஸங்கத்துடன் இதை செய்யும் போது மனது பகவானுடன் ஐக்கியமாகிறது. பாபா கூறிய மற்றொரு உன்னதமான விஷயம், 'பலவகையில் சஞ்சரிக்கும் நம் மனதை கடவுள் மீது செலுத்தி கவலையில்லாமல் இருக்கும்படி' கூறுகிறார். அதாவது நம் மனதை நாமே கட்டுப்படுத்தி அதற்குப் பிறகு பகவானுக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்பது பாபாவின் வாக்கு.




இதையே ஆதிசங்கரர்

"ஸத் ஸங்கத்வே நி: ஸங்கத்வம்
நி: ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிச்'சலதத்வம்
நிச்'சலதத்வே ஜீவன் முக்தி" என்று கூறினார்.

அதாவது நல்லவர்களின் கூட்டத்தில் சேர்க்கை ஏற்பட்டால் ஆசைகள் அழியும். ஆசைகள் அழிந்தால் எதன் மீதும் மோஹம் ஏற்படாது. அத்தகைய மோஹம் நம்மைவிட்டு அகன்றால் ஞானம் கிட்டும். ஞானம் கிட்டினால் அதுவே நம்மை முக்தி நிலைக்கு எடுத்து செல்லும். ஆகவே ஸத்ஸங்கத்திற்கு எவ்வளவு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

அவ்வப்போது நடக்கும் ஸத்ஸங்கங்களில் கலந்து கொண்டு அங்கு சொல்லப்படும் கருத்துக்களை கவனமாக கேட்டு அதன்படி நடந்தால் குருவின் திருவருள் பரிபூரணமாகக் கிட்டும் என்பதை மனதில் கொள்ளவேண்டும்.

நாம் எப்பொழுது எந்த வேலையில் ஈடுபட்டு இருந்தாலும், எந்த வேலையை தொடங்கும் போதும், நாம் செய்யும் அனைத்து செயல்களையும் பாபாவிற்கே அர்ப்பணம் செய்து அனைத்தையும் பாபா பார்த்து கொள்வார் என்று நம்பிக்கையை நம்முள் கொண்டு செயலில் ஈடுபட வேண்டும்.




# பாபாவின் அருளும் பக்தர்களின் அனுபவங்களும்

## 1. உதியின் மஹிமை

பாபாவின் உதியை நாமஸ்மரணை செய்து கொண்டு தன் நெற்றியிலிட்டுக் கொண்டவர்களுக்கு ஆரோக்கியமும், ஐஸ்வர்யமும், கவலைகளின்று விடுதலையும் கிடைக்கும். உதாரணம், நாசிக்கை சேர்ந்த நாராயண் மோதிராம் ஜானியின் நண்பருக்கு தேள் கடித்ததால் தீவிரமான வலி ஏற்பட்டது. அவருக்கு பாபாவின் உதியை வைக்க தேடியபோது உதி கிடைக்கவில்லை. அப்போது பாபாவின் முன் புகைந்து கொண்டிருக்கும் ஊதுபத்தியின் சாம்பலிலிருந்து ஒரு சிட்டிகை எடுத்து, அதை உதியாக நினைத்து பாபாவை மனதில் தியானித்து அதை தேள் கடித்த இடத்தில் தடவினார். விரைவில் வலி மறைந்தது. அத்தகைய மஹிமை வாய்ந்தது பாபாவின் உதி.

## 2. முட்டிவலி மறைந்த மாயம்

நிஷாஜானி என்பவருக்கு கால் முட்டிகளில் தொடர்ந்து வலி இருந்து கொண்டே இருந்தது. மருத்துவர்கள் இதற்கு அறுவை சிகிச்சை ஒன்றே வழி என கூறிவிட்டனர். இதற்கிடையில் அவரது குடும்பத்தினர் சிர்டி மற்றும் ராஜஸ்தானுக்கு சுற்றுலா செல்ல திட்டதிட்டனர். இவளுக்கும் சிர்டி பாபாவை தரிசிக்க வேண்டுமென்ற ஆவலிருந்தாலும் அவளது வலி அவளை வாட்டி வதைத்தது. இச்சமயத்தில் அவளது வீட்டிற்கு வந்த உறவினர் பாபாவின்





வியாழக்கிழமை விரத மகிமையைப் பற்றிக் கூறியதும், உடனே அருகிலிருந்த பாபாவின் கோயிலுக்குச் சென்று, "பாபா இந்த வலி தீர்ந்து சீர்டியில் உன்னை தரிசிக்க அருள் புரிய வேண்டும். நானும் 9 வியாழக்கிழமை விரதமிருந்து உன்னை பூஜிப்பேன்" என்று வேண்டி கொண்டு ஒரு பிரதக்ஷிணம் சுற்றி வெளியே வருவதற்குள் வலி மாயமாய் மறைந்ததைக் கண்டு ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள். சந்தோஷமாக சிர்டி சென்று பாபாவை தரிசித்ததோடு ராஜஸ்தான் சென்று குடும்பத்துடன் அனைத்து இடங்களிலும் உற்சாகமாக சுற்றித் திரிந்தாள். இல்லம் திரும்பிய பிறகு 9 வியாழக்கிழமை விரதத்தை மேற்கொண்டாள். இப்பொழுது விரும்பிய இடங்களுக்கெல்லாம் பாபாவின் அருளால் சென்று வருகிறாள்.

**3. பீமாஜி பாட்டீல் க்ஷய ரோகம்**

அந்த நாட்களில் (1909ம் ஆண்டில்) க்ஷயரோகம், பிளேக் போன்ற வியாதிகள் ஆபத்தானவை. அந்நாட்களில் இவைகளுக்கு எந்த வைத்தியமும் கிடையாது.

நாராயணகாவ் என்னுமிடத்தைச் சேர்ந்த பீமாஜி பாட்டீல் தீவிரமான க்ஷயரோகத்தால் துன்பப்பட்டார். எந்த சிகிச்சையும் பலனளிக்கவில்லை. மரணம் தன்னை நெருங்கிவிட்டது என்று நினைத்த பீமாஜிபாட்டீல், நானாஸாஹேப்புடன் சிர்டி சென்று பாபாவை தரிசித்தார். அவருக்குள்ள தீவிரமான க்ஷய ரோகம் குறித்து பாபாவிடம் விவரித்து அவரை ரட்சிக்குமாறு ப்ரார்த்தித்தார். "முந்தைய தீய கருமங்களால் வந்த இவ்வியாதியை இந்த ஜென்மத்தில்



அனுபவிக்காவிட்டால் அது அடுத்த ஜென்மத்திலும் தொடரும்" என்றார். இருப்பினும் பீமாஜி பாட்டீலின் பிரார்த்தனையைக் கேட்டு உள்ளம் உருகிய பாபா "இம்மசூதியில் கால் வைத்த உடனே உன் கர்மங்கள் தொலைந்து விட்டன" என்று கூறினார்.

அன்று இரவு பீமாஜி பாட்டீலுக்கு பயங்கரமான கனவு தோன்றியது. அதில் பாபா பீமாஜியின் மார்பில் நின்று அழுத்தியதும் மூச்சு திணறிய பீமா, பாபா என்று கதறினார். விடிந்ததும் அவர் குணமடைந்ததாக உணர்ந்தார் பீமாஜி. அவர் பட்ட கஷ்டங்களுக்கு பாபா கனவில் சிகிச்சை அளித்து குணப்படுத்தினார். அதற்கு நன்றி தெரிவிக்கும் விதமாக பாட்டீல் பிரதி ஆண்டும் தன் கிராமத்தில் ஸ்ரீ ஸாயி ஸத்ய விரதம் அனுஷ்டிக்கத் தொடங்கினார்.

**4. பாபாவின் கருணை**

1910ம் ஆண்டு நிகழ்ந்த சம்பவம் இது. அன்றைய தினம் தீபாவளி திருநாள். துனிக்கருகில் அமர்ந்திருந்த பாபா, திடீரென்று தன் கரத்தை துனியில் நுழைத்தார்.

கரம் உடனே கருகிவெந்துவிட்டது. அப்போது அருகில் இருந்த மாதவ் மற்றும் சியாமா, பாபாவின் கரங்களை வேகமாக துனியிலிருந்து இழுத்து 'தேவா எதற்காக இங்ஙனம் செய்தீர்' என்று கேட்டனர். அதற்கு பாபா, "தொலைதூரத்தில் உள்ள ஓர் இடத்தில் ஒரு பெண் மடியில் குழந்தை இருப்பது நினைவில்லாமல், தன் கணவன் அழைக்கும் குரலை கேட்டு எழுந்ததும் மடியிலிருந்த குழந்தை




ஊது உலைகளத்தில் விழுந்தது. அதை பார்த்தவுடன் 'பாபா' என்று என்னை நோக்கி கதறினாள். அந்த கதறலைக் கேட்டு என் கரத்தை நீட்டி குழந்தையைக் காப்பாற்றினேன் என்றார் பாபா. சில நாட்களுக்குப் பிறகு அத்தம்பதியினர் சிர்டி வந்து பாபாவிற்கு நன்றி தெரிவித்துக் கொண்டனர். இதன் மூலம் பாபாவின் எங்கும் நிறை தன்மையும் கருணையும் உணரலாம். ஆபத்து காலத்தில் அந்த குழந்தையை காத்ததுபோல நம்மையும் காக்க பாபாவை வேண்டுவோம்.

**5. தேர்வில் வெற்றி**

பாபாவின் பக்தனான சிவதேவ் என்பவன் ந்யாய சாஸ்த்ர பரீக்ஷை எழுத வேண்டி இருந்த நேரம் அவன் உடல் நிலை காரணமாக அவனால் படிப்பில் கவனம் செலுத்த முடியவில்லை. மற்றும் பம்பாயில் பரீக்ஷை எழுத வேண்டி இருந்ததால், பம்பாய் செல்லும் போது பாபாவை தரிசிக்க சென்றான். தன் பக்தனான சிவதேவின் மனமறிந்த பாபா சிவதேவிடம் "நீ எதற்கும் கவலை கொள்ள வேண்டாம். உன்னுடன் நானிருப்பேன்" என்று ஆசி வழங்கினார். பாபாவையே நம்பிய சிவதேவ் தேர்வு எழுதினான். ஆனால் அவன் எழுதிய பதில் அவனுக்கே திருப்திகரமாக இல்லை. இருப்பினும் பாபாவையே நம்பியதால் தேர்வு முடிவுகள் வந்தபோது சிவதேவ் தேர்ச்சி பெற்றான் என்றும் மௌகீக் பரீக்ஷைக்கு ஆஜராகும்படியும் அழைப்பு வந்தது. பாபாவின் அருளால் நாமும் தேர்வில் தேர்ச்சியடைய பாபா சிவதேவ்க்கருளிய இந்த கட்டத்தை படிப்போமாக.




**6. மகப்பேறு கிட்டியது**

கோபர்காம் பட்டணத்தில் கோபால்ராவ் குண்டு என்பவர் கார்கில் இன்ஸ்பெக்டராக பணி புரிந்துவந்தார். அவருக்கு கல்யாணமாகியும் குழந்தை பாக்கியத்திற்காக பல விரதங்களும், பூஜைகள் செய்தும் பலனில்லாததால் தன் நண்பனின் மூலமாக ஸாயியின் மஹிமைகளை அறிந்து, சிர்டீ சென்று பாபாவை தரிசித்தார். பாபாவின் அனுக்கிரகத்தால் அவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. தனக்கு குழந்தை பிறந்த ஆனந்தத்தில் 1897ல் சிரடியில் உருளி உற்சவத்தை நடத்தலானார். பிறகு அந்த உருளி உற்சவமே ஸ்ரீராமநவமி உற்சவமாக மாறிற்று. குழந்தை இல்லாதவர்களுக்கு பாபா ஒருவரே கண்கண்ட தெய்வம். மழலை செல்வத்திற்காக பாபாவை துதித்தால் அவர்களின் இல்லத்தில் குழந்தை துள்ளி விளையாடும் இது உறுதி.

**7. திருமணம் கைகூடியது**

கோபாலராவ் குண்டு என்பவனுக்கு அஹமத் என்ற நண்பனிருந்தான். அவனுக்கு எத்தனையோ வரன்கள் பார்த்தும் விவாஹம் தள்ளி போனது. கோபால்ராவ் குண்டின் ஆலோசனையின்படி பாபாவை தரிசித்து ஸ்ரீராம நவமி உற்சவத்தில் கலந்து கொண்டான். அடுத்த வருடமே அவனிற்கு பாபாவின் அருளால் விவாகமும் நடந்து, ஒரு குழந்தையும் பிறந்தது. அதிலிருந்து அவன் ஒவ்வொரு வருடமும் ஸ்ரீராமநவமி உற்சவத்தில் தன் குடும்பத்தாருடன் கலந்து கொள்வான். பாபா அவன் வாழ்க்கையில் எந்த

குறையும் இல்லாமல் அவனை காத்தருளினார். மணமாகாதவர்கள் விவாகம் கைகூட இந்த கட்டத்தை படித்து தம் மனதை அறிந்த வாழ்க்கை துணையை பெறுவர்.

**8. தொலைந்தது கிடைத்தது**

பம்பாயில் வாழும் ஹரியின் புதல்வனான கனோபா என்பவர் மிகவும் பணக்காரர். அவருடைய நண்பர்களனைவரும் பாபாவின் பக்தர்கள். பஜனையில் ஈடுபடுபவர்கள். ஆனால் கனோபாவிற்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை. கனோபாவின் நண்பர்கள் பாபாவை தரிசிக்க சீரடி சென்ற போது பாபாவை சோதிக்க அவர்களுடன் கனோபாவும் சென்றான். அவன் விலைமதிப்பற்ற தலைப்பாகையையும், அதைவிட விலை உயர்ந்த காலணியையும் அணிந்திருந்தான். பாபாவை பார்த்ததும் தன்னை மறந்து காலணிகளை வெளியே கழட்டி விட்டு உள்ளே நுழைந்தான். திரும்பி வந்ததும், தன் காலணி காணாமலிருப்பதை கண்டுவிட்டு யாரை கேட்பதென்று அறியாமல் தவித்து கொண்டிருந்தபோது, ஒரு சிறுவன் ஹரிகாபேடா, ஜரீகா ஃபேடா என்று கத்திக் கொண்டு ஒரு கட்டையில் காலணிகளை மாட்டியவாறு கனோபாவிடம் வந்தான். தன் காலணிகளை கண்டதும் அந்த சிறுவனை தன்னருகில் அழைத்து இது எப்படி உன்னிடம் வந்தது என்று கேட்டதும், பாபாதான் இப்படி செய்ய சொன்னார், என்றார். அதாவது இந்த காலணிகளை கண்டு உன்னை அழைக்கும் நபர் ஜரிதலைபாகையை அணிந்தவரும், ஹரியின் மைந்தனும் தானா என்று அறிந்து அவரிடம் ஒப்படைக்க




சொன்னார் என்றான். இதை கேட்டதும் பாபாவை சந்தேகப்பட்டதற்கு வெட்கி தலை குனிந்தான் ஹரி கனோபா. இதை படித்தால் தொலைந்த கனோபாவின் காலணி திருப்பி கிடைத்தது போல் நாம் தொலைத்த பொருள் திரும்ப நமக்கு கிடைக்கும்.

**9. மன அமைதி**

ஒரு சமயம் பாபா துனியில் சமித்துகளை வைத்து கொண்டிருக்க திடீரென்று அக்னி பெரும் ஜ்வாலையாக மாறி கூரை வரை எழும்பியது. அதை கண்ட பக்தர்கள் பயத்துடன் நடுங்கி கொண்டிருந்தனர். இதைக் கண்ட பாபா "இறங்கு உன் குணத்தை காட்ட இது நேரமில்லை என் குழந்தைகள் பயந்துள்ளனர்" என்று தன் தண்டத்தை (ஷட்கா) காற்றில் ஆட்ட அந்த தீ ஜ்வாலை உடனே இறங்கி துனியில் மட்டும் எரியலானது. பக்தர்கள் பாபாவின் பாதங்களை பற்றி துதிக்கலாயினர். இவ்வாறு பக்தர்களின் வாழ்க்கையில் எத்தனையோ இன்னல்கள் நேரலாம். அவற்றிற்கு கலங்காமல் பாபா தீயை ஆணையிட்ட இந்த கட்டத்தை படித்தால் நம் மனது அமைதி பெறும்.

**ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீ ஸாயிநாத் மஹராஜ் கீ ஜய்!**

ஓம் ஸாயிராம்

# ஶ்ரீ ஸாயி நாத பூஜை

**கணபதி த்யானம்:-**

வலது கையில் அக்ஷதை எடுத்துக் கொண்டு இருகைகளாலும் தலையில் 5 முறை குட்டிக்கொண்டே கீழ்க்கண்ட மந்திரத்தைக் கூறி கணபதியின் பாதங்களில் ஸமர்ப்பிக்கவும்.

**சு'க்லாம்பரதரம் விஷ்ணும் ச'சி'வர்ணம் சதுர்புஜம் ।**
**ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோபசா'ந்தயே ॥**

**குரு த்யானம்:-**

**குருர் ப்ரஹ்மா குருர் விஷ்ணு: குருர் தேவோ மஹேச்'வர:**
**குருஸ்ஸாக்ஷாத் பர ப்ரஹ்ம தஸ்மை ஶ்ரீ குரவே நம:**
**நாராயண ஸமாரம்பம் । வ்யாஸ ச'ங்கர மத்யமாம் ॥**
**அஸ்மதாசார்ய பர்யந்தம் । வந்தே குரு பரம்பராம் ॥**

**ஸங்கல்பம்:-**

அக்ஷதையுடன் வலது கையை இடது கைமேல் வைத்து இரண்டு கைகளையும் வலது தொடை மேல் வைத்தவாறு கீழ்வரும் மந்திரத்தைச் சொல்லவும்.

**மமோபாத்த ஸமஸ்த துரிதக்ஷயத்வாரா, ஶ்ரீபரமேச்'வர ப்ரீத்யர்த்தம், சு'பே, சோ'பனே முஹூர்த்தே, ஆத்யப்ரஹ்மண: த்விதீய பரார்த்தே, ச்'வேதவராஹ கல்பே, வைவஸ்வத மன்வந்தரே, அஷ்டாவிம்ச'திதமே, கலியுகே, ப்ரதமே பாதே, ஜம்பூ த்வீபே, பாரத வர்ஷே, பரதகண்டே, மேரோ: தக்ஷிணே பார்ச்'வே, ச'காப்தே, அஸ்மின் வர்த்தமானே, வ்யாவஹாரிகே, ப்ரபவாதீனாம்**



ஷஷ்ட்யா: ஸம்வத்ஸராணாம் மத்யே, *........ நாம ஸம்வத்ஸரே (வருஷத்தின் பெயர்), *....... அயனே (அயனத்தின் பெயர்), *....... ருதெள (ருதுவின் பெயர்), *...... மாஸே (மாதத்தின் பெயர்), *......... பக்ஷே (வளர்/ தேய்பிறை), *....... சு'பதிதெள, *....... வாஸர யுக்தாயாம் (கிழமையின் பெயர்), *......... நக்ஷத்ர யுக்தாயாம் (நட்சத்திரத்தின் பெயர்), சு'பயோக, சு'பகரண, ஏவங்குண விசே'ஷண விசி'ஷ்டாயாம், அஸ்யாம் சு'பதிதெள, அஸ்மாகம் ஸஹ குடும்பானாம் க்ஷேமஸ்த்தைர்ய, தைர்ய, வீர்ய, விஜய ஆயுராரோக்ய ஐச்'வர்யாணாம் அபிவ்ருத்யர்த்தம், ஸமஸ்த மங்களாவாப்த்யர்த்தம், ஸமஸ்த துரிதோப சா'ந்த்யர்த்தம், தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித ஃபல புருஷார்த்த ஸித்யர்த்தம், மம*.........(எந்த பலனை உத்தேசித்து விரதமிருக்கிறோமோ அதை சொல்லி கொள்ளவும்), ஸ்ரீ ஸாயிநாத தேவதா— முத்திச்'ய, ஸ்ரீ ஸாயிநாத தேவதா ப்ரீத்யர்த்தம் யதாச'க்தி, த்யானாவாஹநாதி ஷோடசோ'பசார பூஜாம் ச கரிஷ்யே ॥

(அக்ஷதையை வடக்கே போட்டு கை அலம்பவும்.)

* பஞ்சாங்கத்தைப் பார்க்கவும்

**கண்டா பூஜை**

(மணிக்கு சந்தனம், குங்குமம் இட்டு, பூஜை செய்யும் இடத்தில் நற்தேவதைகளின் வரவுக்காகவும், தீயசக்திகள் விலகவும், கீழ்காணும் மந்திரங்களைக் கூறி மணியடிக்கவும்.)

ஆகமார்த்தம் து தேவானாம் கமநார்த்தம் து ரக்ஷஸாம் ॥
கண்ட்டாராவம் கரோம்யாதெள தேவதாஹ்வான லாஞ்சனம் ।

**கலச' பூஜை**

பஞ்சபாத்திரத்திற்கு நான்கு புறங்களிலும் கீழ்வரும் மந்திரத்தை கூறி சந்தனம் இடவும்

அஸ்மின் கலசே' திவ்ய பரிமள கந்தாம் ஸமர்ப்பயாமி

கீழ்வரும் மந்திரத்தை சொல்லி குங்குமம் இடவும்

கந்தஸ்யோபரி ஹரித்ராகுங்குமம் ஸமர்ப்பயாமி

பிறகு தண்ணீர் நிரப்பிய தீர்த்தபாத்திரத்தில் ஆய்ந்தெடுத்த துளஸி அல்லது புஷ்பத்தை கீழ்வரும் மந்திரத்தைக் கூறி போடவும்

ஓம் கங்காயை நம: ஓம் நர்மதாயை நம:
ஓம் யமுனாயை நம: ஓம் ஸிந்தவே நம:

ஓம் கோதாவர்யை நம: ஓம் காவேர்யை நம:
ஓம் ஸரஸ்வத்யை நம:
ஸப்தகோடி மஹாதீர்த்தானி ஆவாஹயாமி

பிறகு தீர்த்த பாத்திரத்தை வலது கையால் மூடிக் கொண்டு கீழ்கண்ட மந்திரத்தை கூறவும்.

**கலச' ச்'லோகம்**

கலச'ஸ்ய முகே விஷ்ணு: கண்ட்டே ருத்ர: ஸமாச்'ரித:।
மூலே தத்ர ஸ்த்திதோ ப்ரஹ்மா மத்யே மாத்ருகணா: ஸ்ம்ருதா: ॥

குக்ஷௌ து ஸாகரா: ஸர்வே ஸப்தத்வீபா வஸுந்தரா ।
ரிக்வேதோ(அ)த யஜுர்வேத: ஸாமவேதோ(அ)ப்யதர்வண: ॥

அங்கைச்'ச ஸஹிதா: ஸர்வே கலசா'ம்பு ஸமாச்'ரிதா: ।
ஆயாந்து தேவபூஜார்த்தம் ஸர்வ துரிதக்ஷயகாரகா: ॥



கங்கே ச யமுனே சைவ கோதாவரி ஸரஸ்வதி ।
நர்மதே ஸிந்து காவேரி ஜலே(அ)ஸ்மின் ஸந்நிதிம் குரு ॥
ஓம் பூர்புவஸ்ஸுவ: (3 முறை)

என்று ஜபித்து, கலச'த் தீர்த்தத்தால் பூஜா திரவியங்களையும் பாபாவையும் ப்ரோக்ஷித்து, தன்னையும் ப்ரோக்ஷித்துக் கொள்ளவும்.

## ஸமஸ்த உபசார பூஜைகள்

அஸ்மின் பிம்பே/சித்ரபடே ஸாயிநாதம் த்யாயாமி/ ஆவாஹயாமி ॥
(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: நவரத்ன கசித ஸிம்ஹாஸனம்/ ஸிம்ஹாஸநார்த்தம்அக்ஷதான் ஸமர்ப்பயாமி
(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: பாதயோ: பாத்யம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஹஸ்த்தயோ: அர்க்யம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: மதுபர்க்கம் ஸமர்ப்பயாமி
(புஷ்பத்தால் தீர்த்தத்தை ப்ரோக்ஷிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: சு'த்தோதக ஸ்நானம் ஸமர்ப்பயாமி
(புஷ்பத்தால் தீர்த்தத்தை ப்ரோக்ஷிக்கவும்)




ஸ்னானானந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: வஸ்த்ரம்/வஸ்த்ரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (வஸ்த்ரம்/அக்ஷதை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: யஜ்ஞோபவீதம்/யஜ்ஞோபவீதார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (பூணூல்/அக்ஷதை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஆபரணம்/ஆபரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (ஆபரணம்/அக்ஷதை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: கந்தம் ஸமர்ப்பயாமி
(வலது கை மோதிர விரலால் சந்தனமிடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: ஹரித்ராசூ’ர்ணம் ஸமர்ப்பயாமி
(சந்தனத்தின் மீது குங்குமத்தால் திலகமிடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: அலங்கரணார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி (அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: புஷ்பமாலாம் ஸமர்ப்பயாமி
(பூமாலை/தொடுத்த பூச்சரம் ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி (புஷ்பங்கள் ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: துளஸி பத்ராணி ஸமர்ப்பயாமி
(துளஸி பத்ரத்தை ஸமர்ப்பிக்கவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: புஷ்பை: பூஜயாமி

(புஷ்பம் ஸமர்ப்பிக்கவும்)




# ஸ்ரீ சீ'ர்டீ ஸாயிநாத அஷ்டோத்தர ச'த நாமாவளி:

ஓம் ஸ்ரீ ஸாயிநாதாய நம:
ஓம் ஸ்ரீ லக்ஷ்மீநாராயணாய நம:
ஓம் ஸ்ரீ க்ருஷ்ணராம சி'வ மாருத்யாதி ரூபாய நம:
ஓம் ஸ்ரீ சே'ஷ சா'யினே நம:
ஓம் கோதாவரீ தட சி'ர்டீ வாஸினே நம:
ஓம் பக்த ஹ்ருதாயலயாய நம:
ஓம் ஸர்வ ஹ்ருத்நிலையாய நம:
ஓம் பூதாவாஸாய நம:
ஓம் பூதபவிஷ்யத் பாவ வர்ஜிதாய நம:
ஓம் காலாதீதாய நம: 10
ஓம் காலாய நம:
ஓம் காலகாலாய நம:
ஓம் காலதர்ப்பதமனாய நம:
ஓம் ம்ருத்யுஞ்ஜயாய நம:
ஓம் அமர்த்யாய நம:
ஓம் மர்த்யாபயப்ரதாய நம:
ஓம் ஜீவாதாராய நம:
ஓம் ஸர்வாதாராய நம:
ஓம் பக்தாவன ஸமர்த்தாய நம:
ஓம் பக்தாவன ப்ரதிஜ்ஞாய நம: 20
ஓம் அன்னவஸ்த்ரதாய நம:
ஓம் ஆரோக்யக்ஷேமதாய நம:
ஓம் தனமாங்கல்யப்ரதாய நம:
ஓம் ருத்திஸித்திதாய நம:
ஓம் புத்ர மித்ர களத்ர பந்துதாய நம:

ஓம் யோகக்ஷேமவஹாய நம:
ஓம் ஆபத்பாந்தவாய நம:
ஓம் மார்கபந்தவே நம:
ஓம் புக்தி முக்தி ஸ்வர்காபவர்கதாய நம:
ஓம் ப்ரியாய நம: 30
ஓம் ப்ரீதிவர்த்தனாய நம:
ஓம் அந்தர்யாமினே நம:
ஓம் ஸச்சிதாத்மனே நம:
ஓம் நித்யானந்தாய நம:
ஓம் பரமஸுகதாய நம:
ஓம் பரமேச்’வராய நம:
ஓம் பரப்ரஹ்மணே நம:
ஓம் பரமாத்மனே நம:
ஓம் ஜ்ஞானஸ்வரூபிணே நம:
ஓம் ஜகத: பித்ரே நம: 40
ஓம் பக்தானாம் மாத்ரு தாத்ரு பிதாமஹாய நம:
ஓம் பக்தாபயப்ரதாய நம:
ஓம் பக்தபராதீனாய நம:
ஓம் பக்தானுக்ரஹ காரகாய நம:
ஓம் ச’ரணாகதவத்ஸலாய நம:
ஓம் பக்திச’க்திப்ரதாய நம:
ஓம் ஜ்ஞான வைராக்யதாய நம:
ஓம் ப்ரேமப்ரதாய நம:
ஓம் ஸம்ச’ய ஹ்ருதய தௌர்பல்ய பாபகர்ம
வாஸனா க்ஷயகராய நம:
ஓம் ஹ்ருதய க்ரந்திபேதகாய நம: 50
ஓம் கர்மத்வம்ஸினே நம:
ஓம் சு’த்த ஸத்வஸ்த்திதாய நம:




ஓம் குணாதீத குணாத்மனே நம:
ஓம் அனந்த கல்யாண குணாய நம:
ஓம் அமிதபராக்ரமாய நம:
ஓம் ஜயினே நம:
ஓம் துர்தர்ஷாக்ஷோப்யாய நம:
ஓம் அபராஜிதாய நம:
ஓம் த்ரிலோகேஷு அவிகாத கதயே நம:
ஓம் அச'க்யரஹிதாய் நம: 60
ஓம் ஸர்வச'க்தி மூர்த்தயே நம:
ஓம் ஸுரூபஸுந்தராய நம:
ஓம் ஸுலோசனாய நம:
ஓம் பஹுரூப விச்'வமூர்த்தயே நம:
ஓம் அரூபாவ்யக்தாய நம:
ஓம் அசிந்த்யாய நம:
ஓம் ஸூக்ஷ்மாய நம:
ஓம் ஸர்வாந்தர்யாமினே நம:
ஓம் மனோவாகதீதாய நம:
ஓம் ப்ரேமமூர்த்தயே நம: 70
ஓம் ஸுலபதுர்லபாய நம:
ஓம் அஸஹாய ஸஹாயாய நம:
ஓம் அநாதநாத தீனபந்தவே நம:
ஓம் ஸர்வ பாரப்ருதே நம:
ஓம் அகர்மானேககர்ம ஸுகர்மிணே நம:
ஓம் புண்யச்'ரவண கீர்த்தனாய நம:
ஓம் தீர்த்தாய நம:
ஓம் வாஸுதேவாய நம:
ஓம் ஸதாங்கதயே நம:
ஓம் ஸத்பராயணாய நம: 80

ஓம் லோகநாதாய நம:
ஓம் பாவநாநகாய நம:
ஓம் அம்ருதாம்ச'வே நம:
ஓம் பாஸ்கரப்ரபாய நம:
ஓம் ப்ரஹ்மசர்யதபச்'சர்யாதி ஸுவ்ரதாய நம:
ஓம் ஸத்யதர்மபராயணாய நம:
ஓம் ஸித்தேச்'வராய நம:
ஓம் ஸித்த ஸங்கல்பாய நம:
ஓம் யோகேச்'வராய நம:
ஓம் பகவதே நம: 90
ஓம் பக்தவத்ஸலாய நம:
ஓம் ஸத்புருஷாய நம:
ஓம் புருஷோத்தமாய நம:
ஓம் ஸத்ய தத்வபோதகாய நம:
ஓம் காமாதி ஷட்வைரி த்வம்ஸினே நம:
ஓம் அபேதாநந்தானுபவப்ரதாய நம:
ஓம் ஸமஸர்வமதஸம்மதாய நம:
ஓம் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தயே நம:
ஓம் ஸ்ரீ வேங்கடேச'ரமணாய நம:
ஓம் அத்புதானந்தசர்யாய நம: 100
ஓம் ப்ரபன்னார்த்திஹராய நம:
ஓம் ஸம்ஸாரஸர்வ து:கக்ஷயகராய நம:
ஓம் ஸர்வவித் ஸர்வதோமுகாய நம:
ஓம் ஸர்வாந்தர் பஹி:ஸ்த்திதாய நம:
ஓம் ஸர்வமங்களகராய நம:
ஓம் ஸர்வாபீஷ்டப்ரதாய நம:
ஓம் ஸமரஸ ஸன்மார்க ஸ்த்தாபனாய நம:
ஓம் ஸமர்த்த ஸத்குரு ஸ்ரீஸாயிநாதாய நம: 108

இதி ஸ்ரீ ஸாயிநாத அஷ்டோத்தர ச'த நாமாவளி: ஸம்பூர்ணம்.



## உத்தராங்க பூஜை

ஸ்ரீ ஸாயிநாதாய நம: தூபமாக்ராபயாமி
(சாம்பிராணி, ஊதுபத்தி காட்டவும்)
ஸ்ரீ ஸாயிநாதாய நம: தீபம் தர்ச'யாமி
(நெய் தீபத்தை காட்டவும்)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: தூப தீபானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

## நைவேத்திய மந்திரங்கள்

(தரையில் சிறிது தண்ணீர் தெளித்து, நைவேத்யங்களை பாபாமுன் வைத்து கீழ்கண்ட மந்திரத்தை கூறவும்.)
ஓம் பூர்புவஸ்ஸுவ:
(உத்தரணியில் தீர்த்தம் எடுத்து கீழ்க்கண்ட மந்திரம் கூறி தீர்த்தத்தை நைவேத்திய தட்டின் இடப்புறத்திலிருந்து வலப்புறமாக சுற்றி கீழே விடவும்.)

தத்ஸவிதுர்வரேண்யம் பர்கோதேவஸ்ய தீமஹி ।
தியோ யோ ந: ப்ரசோதயாத் ।
(தீர்த்தத்தை நைவேத்தியங்களின் மேல் ப்ரோக்ஷிக்கவும்.)

தேவஸவித: ப்ரஸுவ । ஸத்யம் த்வர்த்தேன
பரிஷிஞ்சாமி । (காலையில்)
தேவஸவித: ப்ரஸுவ । ருதம் த்வா ஸத்யேன
பரிஷிஞ்சாமி । (மாலையில்)
(தீர்த்தத்தை நைவேத்திய தாம்பாளத்தின் இடப்புறத்திலிருந்து வலப்புறமாக சுற்றி கீழே விடவும்.)




அம்ருதமஸ்து, அம்ருதோபஸ்தரணமஸி
(தீர்த்தத்தை அர்க்ய பாத்திரத்தில் விடவும்.)

(கீழ்கண்ட ஒவ்வொரு மந்திரத்திலும் ஸ்வாஹா என்று சொன்ன பிறகு பாபாவின் பக்கம் கைகளால் காண்பித்து நிவேதனம் செய்யவும்.)

ஓம் ப்ராணாய ஸ்வாஹா, ஓம் அபாநாய ஸ்வாஹா,
ஓம் வ்யாநாய ஸ்வாஹா, ஓம் உதாநாய ஸ்வாஹா,
ஓம் ஸமாநாய ஸ்வாஹா, ஓம் ப்ரஹ்மணே ஸ்வாஹா.

ப்ரஹ்மணீம் ஆத்மா அம்ருதத்வாய
ஸ்ரீ ஸாயிநாதாய நம: நாளீகேர கண்ட த்வயம், கதலீஃபலம், க்ருதகுளபாயஸம் (உடைத்த தேங்காய் மூடிகள், வாழைப்பழம், நெய் பருப்பு பாயஸம்)
ஸஹிதம் மஹா நைவேத்யம் நிவேதயாமி
மத்யே மத்யே பானீயம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

நிவேதனானந்தரம் ஆசமநீயம் ஸமர்ப்பயாமி
(அர்க்ய பாத்திரத்தில் 3 முறை தீர்த்தம் விடவும்)

சுத்தமான தாம்பாளத்தில் வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து கீழ்வரும் மந்திரத்தை கூறவும்.

பூகீஃபல ஸமாயுக்தம் நாகவல்லீ தளைர்யுதம் ।
கற்பூர சூர்ண ஸம்யுக்தம் தாம்பூலம் ப்ருதிக்ருஹ்யதாம் ॥
ஸ்ரீ ஸாயிநாதாய நம: தாம்பூலம் ஸமர்ப்பயாமி
(தாம்பூலத்தின் மேல் தீர்த்தம் ப்ரோக்ஷித்து நிவேதனம் செய்யவும்.)



## தீபாராதனை

ஸ்ரீ ஸாயிநாதாய நம: கற்பூர நீராஜனம் ஸந்தர்ச'யாமி ।
(கற்பூர ஆரத்தி காட்டவும்.)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: நீராஜநானந்தரம் ஆசமனீயம் ஸமர்ப்பயாமி । (அர்க்ய பாத்திரத்தில் தீர்த்தம் விடவும்)

(தீபாராதனைக்குப் பிறகு பக்கம் 45ல் இருந்து 48 வரை உள்ள ஆரத்தி பாடலை பாடவும்)

ஸமஸ்தோபசாரான் ஸமர்ப்பயாமி ।
(புஷ்பத்தை பாபாவிற்கு ஸமர்ப்பிக்கவும்.)

## மந்த்ரபுஷ்பம்

ஹரி: ஓம் யஜ்ஞேன யஜ்ஞமயஜந்த
தேவாஸ்த்தானி தர்மாணி ப்ரதமான்யாஸன்
தே ஹ நாகம் மஹிமான: ஸ சந்த யத்ர
பூர்வே ஸாத்யா ஸந்தி தேவா:
ஓம் ராஜாதி ராஜாய ப்ரஸஹ்ய ஸாஹினே நமோ
வயம் வைச்'ரவணாய குர்மஹே
ஸமே காமான் காம காமாய மஹ்யம்
காமேச்'வரோ வைச்'ரவணோததாது
குபேராய வைச்'ரவணாய மஹாராஜாய நம:
ஓம் ஸ்வஸ்தி ஸாம்ராஜ்யம் போஜ்யம் ஸ்வாராஜ்யம்
வைராஜ்யம் பாரமேஷ்ட்யம் ராஜ்யம்
மஹாராஜ்யமாதிபத்ய மயம் ஸமந்தபர்யா
ஈச்'யா ஸார்வபௌம: ஸார்வாயுஷான்
ஆந்தாதாபரார்தாத் ப்ருதிவ்யை ஸமுத்ர பர்யந்தாயா





ஏகராளிதி ததப்யேஷ ச்’லோகோ(அ)பிகீதோ மருத:
பரிவேஷ்டாரோ மருத்தஸ்யா வஸந்க்ருஹே
அவிக்ஷிதஸ்ய காமப்ரேர்விச்’வே தேவா: ஸபாஸத இதி

ஸ்ரீ நாராயண வாஸுதேவாய ஸச்சிதாநந்த
ஸத்குரு ஸாயிநாத் மஹராஜ் கீ ஜெய்
ஸ்ரீ ஸாயிநாதாய நம: மந்த்ர புஷ்பம் ஸமர்ப்பயாமி
(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்.)

ஸ்ரீ ஸாயிநாதாய நம: ச்சத்ர–சாமராதி ஸமஸ்த
ராஜோபசாரார்த்தம் அக்ஷதான் ஸமர்ப்பயாமி ॥
(புஷ்பாக்ஷதைகளை ஸமர்ப்பிக்கவும்.)

**ப்ரார்த்தனை, ப்ரதக்ஷிணம், நமஸ்காரம்**

(கையில் புஷ்பாக்ஷதைகளை எடுத்துக்கொண்டு கீழ்வரும் ஸ்லோகத்தைக் கூறியபடி 3 முறை ப்ரதக்ஷிணம் செய்யவும்)

யானி கானி ச பாபானி ஜன்மாந்தர க்ருதானி ச ।
தானி தானி விநச்’யந்தி ப்ரதக்ஷிண பதே பதே ॥
பாபோஹம் பாபகர்மாஹம் பாபாத்மா பாப ஸம்பவஹ:
த்ராஹிமாம் க்ருபயா தேவ ச’ரணாகத வத்ஸலா
அன்யதா ச’ரணம் நாஸ்தி த்வமேவ ச’ரணம் மம
தஸ்மாத் காருண்ய பாவேன ரக்ஷ ரக்ஷ ஸ்ரீ ஸாயீச்’வரா
ஆத்ம ப்ரதக்ஷிண நமஸ்காரான் ஸமர்ப்பயாமி
(ப்ரதக்ஷிண நமஸ்காரம் செய்யவும்.)

ஓம் ஸ்ரீ ஸச்சிதானந்த ஸமர்த்த ஸத்குரு ஸாயிநாத்
மஹராஜ்கீ ஜெய்




## ஸ்ரீ ஸாயி பஜனை

1. மானஸ பஜரே குரு சரணம் துஸ்தரபவ ஸாகீ தரணம்
குருமஹராஜ் குரு ஜே ஜே – ஸாயி நாத ஸத்குரு ஜே ஜே
த்வாரகாமாயி தீனதயாளு –ஸாயிநாத குருதேவ
க்ருபாளோ
ரக்ஷ ரக்ஷ ஜகதீச்'வர ஸாயி – ஆர்த்தத்ராண
பராயண ஸாயி (மானஸ)

2. சி'வாய பரமேச்'வராய
ச'சி'சே'கராய சந்த்ரசே'கராய
பவாய குண ஸம்பவாய சி'வதாண்டவாய நம ஓம்!

## ஆரத்தி (1)

ஆரத்தி எடுப்போம் ஸ்ரீ ஸாயீ உமக்கே.
ஆரத்தி எடுப்போம் வியாழக்கிழமையுமே.
பரமானந்த சுகத்தினை அளிப்பாயே.
தயையுடன் எமக்கருள் செய்வாயே.
துக்க, சோக, சங்கடம் தீர்த்தருள்வாயே.
வாழ்வில் ஆனந்தம் பொங்க அருள்வாயே.
என் மனதில் உன்னை நினைத்ததுமே,
அக்கணமே வந்து அனுபவம் தந்தாயே.
உந்தன் திருஉதி நெற்றியில் இட்டதுமே
அனைத்து தொல்லைகள் தொலைந்தனவே.
ஸாயி நாமமே தினமும் ஜபித்தோமே.
நொடியிலும் உம்மை யாம் பிரியோமே.

வியாழக்கிழமை உன்னை பூஜித்தோமே.
தேவா! உன் கிருபையால் நலம் அடைந்தோமே.
ராம, கிருஷ்ண, ஹனுமான் ரூபத்திலே
அழகு தரிசனம் எமக்களிப்பாயே
பல மத முறையில் பூஜித்ததுமே
ப்க்தர் குறை கேட்டருள் புரிவாயே.
ஸாயியின் நாமம் வெற்றி நல்கிடுமே.
தேவா! வெற்றியின் அர்த்தம் நீதானே
ஸாயிதாஸனின் ஆரத்தி பாடுபவனுமே
சர்வ சுகம், சாந்தி வளம் பெறுவானே. (ஆரத்தி)

## ஆரத்தி (2)

(மராத்தி)

ஆரத்தி ஸாயிபாபா ஸௌக்ய தாதார ஜீவா
சரண ரஜதளீ த்யாவா தாஸா விஸாவா
பக்தாம் விஸாவா (ஆரத்தி)

ஜாளுநியா அநங்க ஸ்வ ஸ்வரூபீ ராஹே தங்க
முமுக்ஷு ஜனாதாவீ நிஜ டோளா ஸ்ரீரங்க டோளா
ஸ்ரீரங்க (ஆரத்தி)

ஜயா மணீ ஜைஸா பாவ தயா தைஸா அனுபவ
தாவிஸீ தயாகநா ஐஸீ துஜீ ஹீமாவ துஜீ ஹீமாவ (ஆரத்தி)

துமசே நாம த்யாதா ஹரே ஸம்ச்'ருதிவ்யதா
அகாத தவ கரணீ மார்க தாவிஸீ அநாத தாவிஸீ
அநாத (ஆரத்தி)




கலியுகீ அவதார ஸகுண பரப்ரஹ்ம ஸாசார
அவதீர்ண ஜாலாந்ஸே ஸ்வாமி தத்த திகம்பர தத்த
திகம்பர (ஆரத்தி)

ஆடா திவஸா குருவாரீ பக்தகரீதிவாரீ
ப்ரபுபத பஹாவயா பவபய நிவாரீ பய நிவாரீ (ஆரத்தி)

மாஜா நிஜ த்ரவ்ய டேவா தவ சரண ரஜஸேவா
மாகணே ஹேசி ஆதா துஹ்மா தேவாதி தேவா
தேவாதி தேவா (ஆரத்தி)

இச்சிதா தீன சாதக நிர்மல தோய நிஜ ஸூக
பாஜாவே மாதவா யா ஸம்பாள ஆபுளீ பா்க
ஆபுளீ பா்க (ஆரத்தி)

## ஆரத்தி (3)

ஜயதேவ ஜயதேவ ஸாயி மஹராஜ ஸ்ரீ ஸாயி மஹராஜ
ஓவாளீதோம் பாவோம் ஆரத்தி யோகிராஜா (ஜயதேவ)

அகடித கடநா கடலீ பக்த ஜனாம் லாட்டீ
ஸாயி ரூபாநேம் ஆலே ஜகதீம் ஜகஜேட்டீ

அகாத ஹீ குருலீலா ந களே கோணாலா
மங்கல மனந்த–மஹிமா ஸகலாம் தாவியலா (ஜயதேவ)

பஸலாம் பாந்துநி பாரிக சிந்த்யாம் சா ஜோலா
ஆத்மபலாசா தேவ்ஹாம் நவ ப்ரத்யய ஆலா
தேலாம் வாசுநி ஸஹஜீ பணாத்யா பேடவில்யா
அநந்த அஸல்ய லீலா ஜகதாஸா திசல்யா (ஜயதேவ)

அசோத கீதீஹி மோடயா பாபாம்த்யா ராசீ
நாம ஸ்மரணேம் அவத்யா ஜாதீ விலயாஸீ
க்ருபா ப்ரஸாதே லாபே ஸகலஹி ஸம்ருத்தீ
குச'ல கராயா யேதி த்யா ருத்தீ ஸித்தீ (ஜயதேவ)

சீ'ரடி வாஸீ ஸ்வாமீ ஸ்ரீ ஸத்குரு நாதா
துமச்யா சரணீம் ஆதாம் டேவியலா மாதா
உமிலிந்த மாதவ காதோ குண கௌரவ பாவே
துரித ஹராவேம் தர்ச'ந தேவூநீ சு'ப வ்ஹேம் (ஜயதேவ)

ஜய ஜய ஸ்வாமீ ஸாயி ராஜ தாரீ தூ மஜ ஸத்குரு ராஜ
ஸாயி மாவூலீ மாஜே ஆயீ மஜலா டாவ த்யாவா பாயீ

## மங்கள ஆரத்தி

(பூஜை முழுவதும் முடிந்த பிறகு மஞ்சள் குங்குமத்தை ஜலத்தில் கரைத்து பாபாவிற்கு இந்த ஆரத்தி பாடலை பாடி ஆரத்தி எடுக்கவும்)

ஸ்வாமி ஸாயி நாதாய சி'ர்டி க்ஷேத்ர வாஸாய
மாமகா பீஷ்டதாய மஹித மங்களம் – ஸ்வாமி

லோக நாதாய பக்த லோக ஸம்ரக்ஷகாய
நாகலோக ஸ்துத்யாய நவ்ய மங்களம் – ஸ்வாமி

பக்த ப்ருந்த வந்திதாய ப்ரஹ்ம ஸ்வரூபாய
முக்தி மார்க போதகாய பூஜ்ய மங்களம் – ஸ்வாமி

ஸத்ய தத்வபோதகாய சாது வேஷாயதே
நித்ய மங்கள தாயகாய நித்ய மங்களம் – ஸ்வாமி

சுபம்.

## ஸ்ரீ ஸாயி நாத ஏகாதச ஸூத்ரம் - 11 உறுதிமொழிகள்



1. சி'ர்டி ஸ்தலத்தை எவன் மிதிக்கிறானோ, அவனுடைய துன்பங்கள் ஒரு முடிவையடைந்து சௌகரியத்தை அடைகிறான்.
2. துவாரகாமாயியை அடைந்த மாத்திரத்தில் பெரும் துன்பத்திற்குள்ளானவர்களும் மிகுதியான சந்தோஷத்தை அடைவார்கள்.
3. இவ்வுலகை விட்ட பிறகும் நான் சர்வ சக்தியுடன் வேலை செய்வேன்.
4. என்னுடைய மசூதி என் பக்தர்களுக்கு அனேக ஆசீர்வாதங்களையும், புத்திமதிகளையும் கொடுக்கும்.
5. என்னுடைய பூத உடல் என் மசூதியிலிருந்தும் பேசும்.
6. என்னுடைய மசூதியில் இருந்து கொண்டே நான் மிகவும் சுறுசுறுப்பாகவும் தீவிரமாகவும் இருப்பேன்.
7. என்னிடம் வருபவர்களுக்கும், என்னைத் தஞ்சமா[illegible] அடைபவர்களுக்கும், என் உபதேசத்திற்காக என்[illegible] தீவிர நம்பிக்கை உள்ளவர்களுக்கும் நான் எப்பொழுது[illegible]டன் இருக்கிறேன்.
8. நீ என்னை அடைந்தால் நான் உன்னைக் கடாக்ஷிக்[illegible]றேன்.
9. நீ என் பேரில் உன் பளுவைச் சுமத்தினால், [illegible]ான் நிச்ச[illegible]ாக அதைத் தாங்குவேன்.
10. நீ என் உபதேசத்திற்காகவும், உதவிக்காகவும் எ[illegible]னை அடைந்தால் அவைகளை உடனே நான் உனக்கு[illegible] கொடுப்பேன்.
11. என்னுடைய பக்தர்களுடைய வீட்டில் ஒரு போதும் தேவை என்பதே இருக்காது.




**Sri Sai Natha Pujai**

**(Tamil)**

**Price ₹ 15.00**

ISBN 978-81-7950-503-8

